5th July 1962]

வரையில் விசேஷ கவனம் செலுத்தப்படுகிறது, ரோடுகளை தார் ரோடாக மாற்றவேண்டியதன் முக்கியத்துவத்தை சர்க்கார் உணர்ந்திருக்கிறது.

*138 Q.—SRI R. RANGASWAMY: Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(a) whether the scheme for the formation of the road to Panrimalai in Dindigul taluk has been included in the Third Five-Year Plan; and

(b) if so, priority given therefor?

THE HON. SRI V. RAMAIAH: (a) & (b) The question of including this work in the Third Five-Year Plan under the Central Aid Programme for development of roads of economic or inter-State importance is under correspondence with the Government of India.

திரு. ஆர். ரங்கசாமி: கோடைக்கானல் மலையில்—திண்டுக்கல் வட்டத்திற்குக் கீழ்ப் பகுதியிலுள்ள சோளக்காடு, பன்றிமலை போன்ற பெரும் பகுதி எந்தவிதமான வசதியும் இல்லாததனால்—மற்ற இடங்களில் போடப்பட்ட ரோடுகளை தார் ரோடாக மாற்றுவதற்குப் பணத்தைச் செலவழிப்பதைக் காட்டிலும், ரோடு வசதியே இல்லாத இந்தப் பகுதிகளில் ரோடுகளை முதலில் போட்டுக்கொடுப்பதற்கு ஏற்பாடு செய்வார்களா என்று அறிய விரும்புகிறேன்.

கனம் திரு. வி. ராமைய்யா: ரோடு வசதியே இல்லாத பகுதிகளுக்கு போக்குவரத்து வசதி ஏற்படுத்தவேண்டுமென்ற நோக்கத்தினால் தான் இதுபோன்ற திட்டங்களை அரசாங்கம் பரிசீலனை செய்து, அதற்கு மத்திய அரசாங்கம் நிதி உதவி செய்யவேண்டும் என்று கோரியிருக்கிறோம். அவர்களது அங்கீகாரமும், நிதி உதவியும் கிடைத்தவுடன் இந்த வேலைகள் எல்லாம் உடனே துவங்கப்படும்.

நகராட்சிகளின் காலம் நிர்ணயித்தல்.

*139 கேள்வி.—திரு. எம். எஸ். மணி: கனம் நகராட்சி நிர்வாக அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பஞ்சாயத்து யூனியனின் காலம் ஐந்து ஆண்டுகள் என்று இருக்கும்போது நகராட்சிகளின் காலம் மட்டும் மூன்று ஆண்டுகளாக இருப்பதின் காரணமென்ன?

(இ) இதன் பதவிக் காலத்தையும் ஐந்து ஆண்டுகளாக நீடிக்க அரசாங்கம் ஆலோசித்து வருகிறதா? அதன் முடிவு என்ன?

THE HON. SRI S. M. A. MAJID: (a) & (b) No specific reason can be furnished for fixing the term of office of the Municipal Councils as three years. However, the question of enhancing the term of office of the Municipal Councils from three to five years is under consideration of the Government. A decision has not so far been reached in the matter.

[5th July 1962

**திரு. எம். எஸ். மணி :** ஏதாவது நகராட்சி மன்றத்திலிருந்து தங்களுடைய பதவிக் காலத்தை ஐந்து ஆண்டுகளுக்கு நீடிக்க வேண்டுமென்ற கோரிக்கை அரசாங்கத்திற்கு தீர்மானமாக நிறை வேற்றப்பட்டு வந்துள்ளதா ?

**கனம் திரு. சே. ம. அ. மஜீத் :** தனிப்பட்ட முறையில் எல்லா நகராட்சி மன்றங்களில் இருந்து இதுபற்றி தீர்மானம் வந்தாலும் வராவிட்டாலும், ஏற்கனவே இதுபற்றி அரசாங்கம் பரிசிலனை செய்து கொண்டிருக்கிறார்கள் என்று சொன்னேன். இன்னும் முடிவு எதுவும் செய்யப்படவில்லை. 1920-ஆம் வருஷத்திலேயே இந்த முனிசிபல் சட்டம் வந்ததால் இதுபற்றி பரிசிலனை செய்யப் பட்டு வருகிறது.

**திரு. மு. போ. வடிவேலு :** பஞ்சாயத்து யூனியனில் பதவி வகிப்பவர்கள் ஐந்தாண்டுகாலம் பதவி வகிக்கலாம் என்று சட்டம் கூறுகிறது. ஆனல் பஞ்சாயத்து தலைவர்களின் பதவிக்காலம் விரைவில் முடியப்போகிறது. பதவி காலம் முடிந்தவுடன் திரும்ப அவர்கள் தேர்தல் மூலம் வராவிட்டாலும்கூட பஞ்சா யத்து யூனியனில் கவுன்சிலராக இருக்கலாமா ? அல்லது ஊராட்சி மன்றத் தேர்தல்கள் ஒத்திவைக்கப்படுமா என்று கேட்கவிரும்பு கிறேன்.

**கனம் திரு. சே. ம. அ. மஜீத் :** அதற்குத் தனிக்கேள்வி போட வேண்டும்.

**கனம் திரு. எம் பக்தவத்சலம் :** கனம் முதல் அமைச்சர் அவர் களுக்கு இந்தக் கேள்வியைப் போடவேண்டும்.

**திரு. மீ. கல்யாணசுந்தரம் :** நகராட்சி மன்ற பதவிக்காலத்தை நீடிக்கும் யோசனை ஆலோசனையில் இருக்கிறதா? அந்தச் சட்டத் தைத் திருத்தும் யோசனை இருக்கிறதா ?

**கனம் திரு. சே. ம. அ. மஜீத் :** இந்தச் சட்டத்தைத் திருத்து வது சம்பந்தப்பட்டவரையில் ஏற்கனவே பரிசிலனை செய்து 'ஒயிட் பேப்பர்' அனுப்பப்பட்டிருக்கிறது. Legislature Committee அதைப் பரிசீலிக்க வேண்டாம் என்று நிறுத்தியிருக் கிறார்கள். தற்போது சர்க்கார் பரிசிலனையில் இருக்கிறது. சட்டத்தை திருத்த யோசனை இருக்கிறது.

*Multi-purpose schools*

* 140 *Q.*—Sri K. MOOKIAH THEVAR : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether there is any proposal to start multi-purpose schools; and

(*b*) if so, in which districts?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) Multi-purpose schools are high schools in which academic and diversified courses like Engineering and Agriculture are provided. Thirty diversified courses are proposed to be started during 1962–63. The schools in which they are to be started have not yet been selected.